17th September 1958]

*Adult education*

*160 *Q.*—SRI K. VINAYAKAM (on behalf of Sri K. Ramachandran) : Will the Hon. the Minister for Finance be pleased to state—

(*a*) the number of adult schools in the State.

(*b*) the strength of such schools;

(*c*) whether any target is fixed in this respect every year; and

(*d*) if so, the number of schools to be opened during 1958–59?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) 1,579 on 31st March 1958.

(*b*) 35,689.

(*c*) Yes, Sir.

(*d*) 60 schools.

*161 *Q.*—SRI P. G. MANICKAM : கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) 1957-ம் வருஷ ஆரம்பத்திலே எத்தனை முதியோர் வாசக சாலைகள் இருந்தன?

(ஆ) இவைகளில் எத்தனை பேர் படித்துக்கொண்டிருந்தார்கள் ?

(இ) ஷை வருஷத்தில் எத்தனை முதியோர் வாசக சாலைகள் மூடப் பட்டன?

THE HON. SRI C. SUBRAMANIAM : (அ) 1,644.

(ஆ) 45,850.

(இ) 260.

SRI P. G. MANICKAM : எழுதப்படிக்கத் தெரிந்து கொண்டார்களா என்பதை அறிவதற்கு சம்பந்தப்பட்ட அதிகாரிகள் மூலம் ஏதாவது பரீட்சை நடத்தப்படுகிறதா ? அம்மாதிரி பரீட்சை நடத்தப்பட்டால் எத்தனை பேர்களுக்கு சர்டிபிகேட்கள் வழங்கப்பட்டன ?

THE HON. SRI C. SUBRAMANIAM : அந்த விவரம் என்னிடம் இல்லை.

SRI A. V. P. ASAITHAMBI : சென்னை நகரில் பல மன்றங்கள் முதியோர் கல்வியைப் பரப்புவதற்கு இரவு பள்ளிகளை நடத்துகிறார்கள். அந்தப் பள்ளிகளுக்கு அரசாங்கம் உதவி அளிக்க முன்வருமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : தேசிய விஸ்தரிப்பு திட்டம், சமுதாய நல அபிவிருத்தி திட்டம் நடக்கக்கூடிய இடங்களில் இந்த உதவி இப்பொழுது அளிக்கப்படுகின்றது. மற்ற இடங்களில் தனிப்பட்டவர்களின் முயற்சியால் நடந்துகொண்டு வருகிறது.

SRI P. S. CHINNADURAI : தொழிலாளர்கள் அதிகமாக வசிக்கின்ற பிரதேசங்களில் முதியோர் கல்விச்சாலைகளை அதிகப்படுத்த அரசாங்கம் முன்வருமா?

THE HON. SRI C. SUBRAMANIAM : அது கவனிக்கப்படவேண்டிய விஷயம். அதற்காக ஒரு தனித் திட்டத்தை அங்கத்தினர் அவர்கள் சமர்ப்பித்தால், கட்டாயம் அதுபற்றி ஆலோசிக்கப்படும்.

[17th September 1958

SRI M. C. MUTHUKUMARASWAMY: அபிவிருத்தி வட்டாரங்களில் மாத்திரம் முதியோர் கல்விக்கு உதவி அளிக்கப்படுவதாகச் சொன்னார்கள். அபிவிருத்தி வட்டாரங்களில் சேராத பிரதேசங்களில் முதியோர் கல்வியை அமுலுக்குக் கொண்டுவராததற்கு அரசாங்கம் ஏதாவது நடவடிக்கை எடுக்குமா என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM: மற்ற இடங்களில் இது இப்பொழுது தனிப்பட்டவர்களின் முயற்சிக்கு விடப்பட்டிருக்கிறது. எல்லாப் பகுதிகளும் இந்த அபிவிருத்தித் திட்டங்களின் கீழ் வர இருப்பதால், அந்த சமயத்தில் முதியோர் கல்வித் திட்டம் எல்லா இடங்களிலும் அமுலுக்கு வரும்.

SRI K. ANBAZHAGAN: முதியோர் கல்வி பள்ளிக்கூடங்களில் சுமார் 260 மூடப்பட்டன என்ற கருத்தை அமைச்சர் அவர்கள் தெரிவித்தார்கள். அப்படி மூடப்படுவதற்கு காரணம் என்ன? அந்த இடங்களில் எல்லா முதியோர்களும் கல்வி கற்றுவிட்டார்களா? அந்த இடங்களில் அவசியம் இல்லையா?

THE HON. SRI C. SUBRAMANIAM: இல்லை. 1954-ம் ஆண்டில் இந்த முதியோர் கல்வி திட்டத்தின் அடிப்படை மாற்றப்பட்டது. இதற்கு முன்பு 11 வயதிலிருந்து 45 வயது வரை இருக்கக்கூடிய எல்லோருக்கும் முதியோர் கல்வி அளிக்கப்பட வேண்டுமென்ற அடிப்படையில் இந்த பள்ளிக்கூடங்கள் நடத்தப்பட்டன. அதற்கு பதிலாக, அதை மாற்றி ஆரம்ப காலத்திலே படிப்பு இல்லாமல் இருக்கக்கூடியவர்களுக்கு முக்கியத்துவம் கொடுத்து, அவர்களை படிக்க வைத்து விட்டால் பிறகு வயது வந்தவர்களில் படிக்காதவர்கள் இருக்கமுடியாது என்று கருதி, 8 அல்லது 9 வயதிலிருந்து 18 வயது வரையில் உள்ளவர்களுக்கு முக்கியத்துவம் கொடுத்து அவர்களுக்கு கல்வியை போதிக்கவேண்டுமென்ற முறையில் தேசீய விஸ்தரிப்புத் திட்டம், சமுதாய நல அபிவிருத்தி திட்டம் அமுலிலிருக்கும் பிரதேசங்களில் அதிகாரிகள் அதிகமாக இருக்கக்கூடிய காரணத்தினாலே அந்தப் பிரதேசங்களில் இந்த முதியோர் கல்வி திட்டம் பரப்பப்படுகிறது. இதனால் 260 பள்ளிக்கூடங்கள் மூடப்பட்டன.

SRI K. VINAYAKAM: Whereas it is considered that the amount spent on adult education is a criminal waste as the amount is spent on a dying generation, will the Government consider scrapping the whole of this scheme and concentrate more upon universal primary education which will solve our illiteracy problem sooner?

THE HON. SRI C. SUBRAMANIAM: I do not know whether it could be called a criminal waste. But we thought it was a waste and we are now concentrating on the age group of 9 to 18.

MR. SPEAKER: It is not advisable to use such strong language as 'criminal waste' and 'dying generation'.

SRI K. VINAYAKAM: I think it is not . . .

MR. SPEAKER: I only said that it was not advisable. The hon. Member may think it is right.

*Community Development Scheme*

* 165 *Q.*—SRI N. K. PALANISAMI: Will the Hon. the Chief Minister be pleased to state—

(*a*) whether he had received representations during his tour of Erode taluk during May 1958 that the Community Development Scheme should be extended to the whole of Erode taluk; and

(*b*) if so, the action taken thereon?

THE HON. SRI C. SUBRAMANIAM: (*a*) & (*b*) No, Sir.